(3) THE MADRAS ANIMAL PRESERVATION BILL, 1958 (L.C. BILL NO. 2 OF 1958).

5-00 p.m.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Speaker, I move—

"That the Madras Animal Preservation Bill[a], 1958 (L.C. Bill No. 2 of 1958) as passed by the Council be taken into consideration."

கனம் சபாநாயகர் அவர்களே, விவசாய நாடு என்ற முறையில், நமது தேசீய பொருளாதார அபிவிருத்திக்கான வேலைத் திட்டத்தில், நமது கால்நடை செல்வத்தை பாதுகாப்பதும் அபிவிருத்தி செய்வதும் முக்கியமான பணியாகும். பசுவும், காளையும் நமது வாழ்வில் பங்காளிகள் என்றால் அது மிகையான கூற்று அல்ல. காளைகள் வேளாண்மைக்கு வேண்டிய மூல உழைப்பு சக்தியை அளிக்கின்றன. பசுக்கள், மக்களுக்கு, குறிப்பாக குழந்தைகளுக்கும் சக்தி குன்றியவர்களுக்கும் இன்றியமையாத பாலை வழங்குகின்றன. எனவே பயனுள்ள கால்நடைகள் கொல்லவிடாமல் அவைகளை பாது காப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியது மிக முக்கியமான காரியமாகும். நமது அரசியல் அமைப்பும் இதை வற்புறுத்துகிறது. கால்நடை வதையைக் கட்டுப்படுத்தி, பயனுள்ள கால்நடைகளின் பாதுகாப்புக்கு வகை செய்வதற்காக, மத்திய கோசம்வர்த்தன கவுன்சில் தயாரித்த நகல் மசோதாவை இந்திய அரசாங்கம் அண்மையில் நமது அரசாங்கத்திற்கு அனுப்பி வைத்தது. மேற்கண்ட மசோதாவில் சொல்லப்பட்ட ரீதியில் சட்டமியற்ற நடவடிக்கை எடுப்பதைப் பற்றி ஆராயும் படியும், இந்திய அரசாங்கம், மாநில அரசாங்கங்களைக் கேட்டுக்கொண்டது.

இந்திய அரசாங்கத்தின் அவ்வேண்டுகோளின்பேரில் நமது தேசத்தி லுள்ள பெரும்பாலான மாநிலங்கள் ஏற்கனவே தகுந்த சட்ட நடவடிக்கை களை நிறைவேற்றி உள்ளன. மைசூர்- ராஜஸ்தான், மத்திய பிரதேசம், உத் தரப்பிரதேசம் ஆகிய மாநிலங்கள் பசுவதையை பூர்ணமாகத் தடை செய்துள்ளன. பம்பாய், அஸ்ஸாம், மேற்கு வங்கம், ஹைதராபாத் ஆகிய மாநிலங்களில் ஓரளவுக்கு தடை விதிக்கப்பட்டுள்ளது. இதையொட்டி இந்த அரசாங்கம் 1958-ம் ஆண்டில் சென்னை விலங்குகள் பாதுகாப்பு மசோதாவை தயாரித்துள்ளது. சில வார்த்தை மாற்றங்களுடன் அம் மசோதா அந்த மன்றத்தில் நிறைவேற்றப்பட்டது. காளைகள், எருதுகள், பசுக்கள், கன்றுகள், எருமைகள், எருமைக்கன்றுகள், போன்ற சில வகை கால்நடைகளை வதை செய்வதை தடுப்பதே மசோதாவின் நோக் கமாகும். பத்து வயதுக்கு மேற்பட்ட விலங்குகளும், உழைப்புக்கும் வளர்ப் புக்கும் தகுதியற்றவைகளும் காயமடைந்தோ, ஊனப்பட்டோ அல்லது தீராத வியாதியினால் பாதிக்கப்பட்டோ நிரந்தரமான சக்தி குன்றிய விலங்குகள் மட்டுமே கொல்லப்படுவதற்கு அனுமதிக்கப்படும். அத்தகைய விலங்கு கள் எதையாவது கொல்லவேண்டுமானால் அந்த விலங்கு கொல்லப்படு வதற்கு தகுதியானது என்று உரிய அதிகாரியிடம் சான்று பெற்றாக வேண்டும். விலங்குகளை வதைக்கும் நோக்கத்துடன் வேண்டுமென்றே அவைகளை முடமாக்குகிறவர்களுக்கும் அல்லது அவைகளுக்கு விஷம் வைக்கின்றவர்களுக்கும் அல்லது அவைகளைப் பயனற்றவைகளாச செய்பவர்களுக்கும் தக்க தண்டனை அளிக்க மசோதாவில் வகை செய்யப்பட்டுள்ளது.

மசோதாவை விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளும் பிரேரணையை ஆத ரிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன். கனம் அங்கத்தினர்கள் ஏற்றுக்கொள் வார்கள் என்று நம்புகிறேன்.

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Animal Preservation Bill, 1958 (L.C. Bill No. 2 of 1958) as passed by the Council be taken into consideration."

---

[a] Published in *Fort St. George Gazette*, dated15th February 1958, Passed by the Legislative Council at its meeting on 17th and 18th March 1958.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move—

"That the Madras Animal Preservation Bill, 1958 (L.C. Bill No. 2 of 1958) as passed by the Council be referred to a Select Committee."

SRI T. S. RAMASWAMY PILLAI : I second the amendment, Sir.

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Animal Preservation Bill, 1958 (L.C. Bill No. 2 of 1958) as passed by the Council be referred to a Select Committee."

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தமாதிரி மசோதாவை சட்டமாக்க வேண்டுமென்று 1953-லேயே மத்திய சர்க்காரிலிருந்து யோசனை தந்தார்கள். இப்பொழுது 1958–ல் இந்த மசோதா வந்திருக்கிறது. மசோதாவின் நோக்கம் என்னவோ மிகவும் பாராட்டத்தகுந்தது. சீரிய நோக்கம் தான். விவசாயத்திற்கு மனித உழைப்பு எவ்வளவு முக்கியமோ அதே போலே இவைகளின் உழைப்பும் மிக முக்கியமானது என்பதில் இரண்டு கருத்து இருக்க முடியாது. ஆனால் சட்டத்தின் நோக்கங்கள் நிறைவேறுமா என்பதில்தான் சந்தேகம். மேலும் நம் ராஜ்யத்திலே அத்தகைய கொடுமைக்கு இவைகள் ஆளாகின்றனவா என்று யோசிக்கவேண்டும். ஐந்து வருஷத்திற்கு பிறகு சட்டம் கொண்டு வரவேண்டிய அவசியம் என்ன? இவையெல்லாம் எனக்கு பல சந்தேகங்களை கிளப்புகின்றது. இதன் மூலம் கிராமப்புறங்களிலே கால்நடை நல்ல முறையிலே அபிவிருத்தி அடைய இந்த சட்டம் உதவி செய்யுமா என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. மற்ற உதவிகளெல்லாம் சர்க்கார் செய்ய வேண்டியது நிறைய இருக்கின்றன. அதைப்பார்க்கும்போது அவர்கள் கொடுக்கக்கூடிய வசதிகள் மிகக் குறைவாகத்தான் இருக்கிறது. இப்பொழுதே போதுமான கால்நடை வசதிகள் இல்லாமல் விவசாயிகளும், போதுமான உணவுப்பொருள்கள் கிடைக்காமல் கால்நடைகளும் கஷ்டப்படுகின்றன. பஞ்சப் பிரதேசங்களில் விவசாயிகள் கஷ்டப்படுகிறார்கள். ஆனால் பஞ்சப்பிரதேசத்தில்தான் கால்நடை அபிவிருத்தி சாத்தியமாகும். இந்த வருஷத்தில் கூட திருச்சியில் வட பகுதிகளிலும், சேலம் ஜில்லாவில் பெரும் பகுதிகளிலும் எருதுகளுக்கு தீனி கிடைக்காத கஷ்டமான நிலைமை இருக்கிறது. வைக்கோல் பிண்ணாக்கு முதலியவை கிடைப்பது அரிதாகிக்கொண்டிருக்கிறது. காடுகளில் மேய்ச்சலுக்குகூட அதிகாரிகளின் தொந்தரவு அதிகமாக இருக்கிறது. அங்கெல்லாம்தான் கால்நடை வளருமே தவிர இந்த சட்டம் இயற்றுவதால் கால்நடை வளரும் என்று நம்புவதற்கில்லை. ஆனால் கன்றுக்குட்டிகளை எடுத்து சாப்பிடும் பழக்கம் இருக்கிறது. ஒருக் கால் இந்த சட்டத்தால் கன்றுக்குட்டிகள் மிச்சமாகும். இந்தச் சட்டம் விவசாயிகளுக்கு உதவி அளிக்கும் முறையில் இல்லாமல் அவர்களுக்கு இம்சை கொடுக்கக்கூடிய முறையில் அமையுமோ என்று சந்தேகிக்கிறேன். மதுவிலக்கு சட்டத்தால் விசேஷ பலன் ஏற்பட்டு விடவில்லை. அதேபோல் இம்மாதிரி சட்டம் கால்நடையை பாதிக்கும் என்றே நினைக்கிறேன். எஸ். பி. ஸி. ஏ. இன்ஸ்பெக்டர்கள், அவர்களுக்கு புண்கழுத்து இன்ஸ்பெக்டர்கள் என்றே வழங்குகிறது. இவர்கள் செய்யும் நன்மையைவிட தொந்தரவே அதிகம். இவர்களைக்கண்டாலே விவசாயிகளுக்கு பயம். புண்கழுத்து மாடுகள், லாடமில்லாத மாடுகள் வேலை செய்வதும் ஒன்றும் நிறுத்தப்படுவதில்லை. ஆனால் இதனால் இந்த இன்ஸ்பெக்டர்களுக்கு ரூபாய் 5–10 கிடைக்கிறதே அன்றி உண்மையில் கஷ்டப்படும் கால்நடைகள் வேலையில் இருந்து ஓய்வு பெறுவதில்லை. விவசாயிகள் இவர்களுக்கு பணம் கொடுக்கும் தொந்தரவுதான் மிச்சம்.

3rd April 1958] [Sri M. Kalyanasundaram]

வட இந்தியாவில் வகுப்புக்கலவரம் காரணமாக பசு வதை செய்வதை தடுக்க வேண்டிய அவசியம் இருந்தது. வகுப்பு வெறிகள் அங்கு அதிகம். ஆனால் தமிழ்நாட்டில் மாட்டு இறச்சியை உண்பவர்கள் கிடையாது. அதுவும் உயிரோடு இருக்கும் மாடுகளைக் கொன்று இறைச்சி தின்னமாட்டார்கள். செத்த மாட்டின் இறைச்சியை கிராமபுரத்திலே சிலர் உண்பார்கள். அந்தமாதிரி பாகுபாடு செய்து ஏதாவது தடை செய்தால் ஓரளவுக்கு ஒப்புக்கொள்ள முடியும், ஆகவே இந்த சட்டம் கால் நடை செல்வத்தை வளர்க்கும் என்று ஒப்புக்கொள்ள முடியாது. அதுவும் சர்டிபிகேட்டு வாங்கிக்கொள்ளலாம் என்று இருக்கிறது. பத்து வயது என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. நம் நாட்டிலே மனிதன் சாராசரி வயதே மிகக் குறைவு. எருது மற்றவைகளின் வயது ரொம்பவும் குறைவு. மூன்றில் இருந்து ஆறு வயது வரைதான் மாடுகளுக்கு நல்ல பருவம் என்று கொள்ளலாம். பத்து வயதுக்குப் பிறகு அடிக்கலாம், கொல்லலாம் என்பதானது அர்த்தமற்றதாக இருக்கிறது. சர்டிபிகேட் வாங்குவது என்பது கால்நடையை பாதிக்கக்கூடியதாகவே அமையும் கால்நடை செல்வத்தை அபிவிருத்தி செய்ய உதவியாக இருக்காது என்பதே என்னுடைய கருத்து. சர்டிபிகேட் மறுக்கப்பட்டால் அப்பீல் கவர்ன்மெண்டு வரைக்கும் இருக்கிறது. இது மிகவும் முக்கியமான விஷயம். இதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

கலெக்டருக்கு இப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுத்திருக்கலாம். 5-10 p.m.
கலெக்டருக்குக் கீழ் உள்ள அதிகாரிகளுக்கு இப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுத்து விட்டு அதன் மேல் வரக்கூடிய அப்பீலை முடிவு செய்வதற்கு உள்ள அதிகாரத்தை கலெக்டருக்குக் கொடுத்தால் விவசாயிகளுக்குத் தொந்தரவு இல்லாமல் இருக்கும். இந்தச் சட்டம் அவசியமா இல்லையா என்பதைப்பற்றி நிர்ணயம் செய்ய வேண்டியது இல்லை. இதை சட்டமாக்குவதில் எனக்கு ஆட்சேபணை இல்லை. இதை சட்டமாக்கினால் இது சரியான படிக்கு அமுலாக்கப்படுமா என்பதுதான் என்னுடைய சந்தேகம். இதை நல்ல முறையில் அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமானால் இந்த சட்டத்தைப் பற்றி கிராமங்களில் டாம் டாம் மூலம் பிரசாரம் செய்து இதைப் பற்றி மக்களுக்குத் தெரியப்படுத்த வேண்டும். இப்படிப்பட்ட ஒரு சட்டம் இல்லாமலேயே இந்த சட்டத்தின் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ளலாம் என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த சட்டத்தை நிறைவேற்றிய பிறகாவது இதைப்பற்றி டாம் டாம் மூலமாக கிராமங்களில் பிரசாரம் செய்ய வேண்டும். நான் சொன்ன யோசனைகளை ஏற்றுக் கொண்டு இந்தச் சட்டத்தை நிறைவேற்றாமல் கைவிடுவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. இதை நிறைவேற்றத்தான் போகிறார்கள். இதை நிறைவேற்றுவதில் எனக்கு ஆட்சேபணை இல்லை. இந்தச் சட்டம் விவசாயிகளைக் கொடுமைப்படுத்தாத வகையில் இதை நிறைவேற்றி அமுலுக்குக்கொண்டு வரவேண்டும். இந்தச் சட்டத்தைப்பற்றி கிராமங்களில் டாம் டாம் செய்த பிறகு இதை அமுலுக்குக் கொண்டு வரவேண்டும் என்ற யோசனையைக் கூறிக்கொண்டு நான் முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI T. T. DANIEL : Mr. Speaker, while supporting this Bill, I will make a few suggestions. The object of the Bill is to provide for the preservation of certain animals by regulating the slaughter thereof. " Animal " is defined in clause 2 as " a bull, bullock, cow, calf, he-buffalo or she-buffalo or buffalo-calf." I suggest that it must also include ' sheep '. " Sheep " according to the general understanding is called the poor man's cow. So, sheep also should be brought within the definition of ' animal '. As sheep is also of the same species as cows it also must come within the definition of " animal ".

[Sri T. T. Daniel] [3rd April 1958

I would like to draw the attention of the Hon. Minister to another matter. The competent authority to be appointed under clause 3 for executing any of the functions under the Act has got the power to enter and inspect anybody's premises. So anybody's premises can be entered by those people who can conduct an inspection of the premises if they have got any reason to suspect that any offence under the Act is likely to be committed. Thus a very wide power is given to the competent authority under this Bill. The power given to that authority in relation to search and inspection seems to be unfettered and unrestricted. In view of that, the officer concerned should have certain status and the status of the officer who will be appointed under the Act by the notification should be specifically mentioned. In clause 3, it is stated that the Government may, by notification appoint the Executive Authority or any other authority or person to perform all or any of the functions of a competent authority. " As the Bill now stands, the Government can appoint anybody as competent authority. The Executive Authority has been defined in clause 2. According to this definition, 'Executive Authority' means an Executive Authority as defined in clause (8) of section 3 of the Madras Public Health Act, 1939.' According to the definition in section 3 of the Madras Public Health Act, 1939, Executive Authority means the President or Chairman of the Municipality or any authority who has the executive powers under the District Municipalities Act or the City Municipal Act or the District Boards Act. So, there seems to be some contradiction with regard to the definition. Because, under clause 3, the Government can also appoint any other person other than the Executive Authority. I would therefore suggest that any person who is appointed under this clause must be not below the rank of the Executive Authority under Section 3 of the Madras Public Health Act.

With regard to appeals and revision, the Government have got power *suo moto* to question the legality or propriety of any action taken by the competent authority, even without hearing the aggrieved party in question. I would suggest therefore that if the Government want to pass any order, the aggrieved party must at least be given an opportunity to be heard before an order is passed questioning the legality or propriety of any action taken by the competent authority. Now, clause 4 provides for the prohibition of slaughter of animals without certificate. According to this clause the competent authority can issue a certificate for the slaughter of the animal under certain conditions which are enumerated in sub-clauses (2) and (3). In clause 4 (3) (*a*), it is stated, 'the animal is over ten years of age and is unfit for work and breeding.' It come to this. If the animal is ten years of age and if it is unfit for work and breeding even for a few days, the competent authority can issue a certificate and the animal concerned could be slaughtered. The age-limit is more or less the passport for the animal. I would suggest that the object of the Bill must be that the animal must be permanently incapacitated for work due to age.

3rd April 1958] [Sri T. T. Daniel]

But, as the clause now stands, if the animal is over 10 years of age and if it is unfit for work, a certificate can be issued. It is not stated anywhere that the animal must be permanently incapacitated for work or breeding. This idea does not come in this clause. I would suggest that the Hon. Minister may make it clear by suitable amendment so that the object of the Bill is fulfilled by inserting the word 'permanently' between the words 'is' and 'unfit' occurring in sub-clause (3) (*a*) of clause 4.

* **Sri A. R. SUBBIAH MUDALIAR:** கனம் சபாநாயகர் அவர்களே, கால்நடை பாதுகாப்புச் சட்டத்தைப்பற்றி சில வார்த்தைகள் சொல்லப் பிரியப்படுகிறேன். இது ரொம்பவும் வரவேற்கக்கூடியது. நமக்குக் கால்நடைச் செல்வம் மூலமாக ஆயிரம் கோடிக்கு உரம் கிடைக்கிறது, ஆயிரம் கோடிக்குச் வேலை மூலமாக வாய்ப்புக் கிடைக்கிறது என்பது சர்க்காருடைய ஒரு கணக்கு. அதை விட நாம் பசுவை கடவுள் என்று பாவித்து நடத்துகிறோம். பசு வதை என்பதை கனவிலும் காணக்கூடாத முறையில் நாம் போற்றிக்கொண்டு வருகிறோம். அவைகளை ஆதரிக்க வேண்டியது அவசியம்தான். ஆனால் சட்டத்தைப் புறக்கணிக்கக்கூடிய நிலைமையில் வழி சில இருந்து கொண்டிருக்கின்றன. அதாவது எங்கள் ஜில்லாவுக்கு அடுத்தாற்போல் அதாவது செங்கோட்டை கழிந்தவுடன் திருவாங்கூர் ஸ்டேட் வருகிறது. கொல்லம் ஊருக்கு எங்கள் கிராமம் வழியாக தினம் ஆயிரக்கணக்கான மாடுகள் ஸ்லாட்டருக்குக் கொண்டு போகப்படுகிறது. இந்தச் சட்டத்தின் மூலமாக நம்முடைய தமிழ் நாட்டில் தடை விதிக்கப்படுகிறது. அடுத்துள்ள ஸ்டேட்டுக்கு மாடுகள் கொண்டு போவதற்கு யாதொரு விதமான தடையும் இதில் இல்லை. சாதாரணமாக செங்கோட்டை கழிந்து அடுத்தாற்போல் ராஜகிரகம் என்று கேரள ஸ்டேட்டில் அதிகப்படியாக பசு வதை செய்கிறார்கள். அங்கே இதைச் சாப்பிடக்கூடியவர்கள் ஜாஸ்தி. அப்படிப்பட்ட நிலைமையில் இங்கேயிருந்து அங்கே கொண்டு போவதற்கு எந்தவிதமான தடையும் இந்தச் சட்டத்தில் இல்லை. தங்களைக் சட்டத்திலிருந்து காப்பாற்றிக்கொள்வதற்காக மாடுகளை அங்கே கொண்டு போவதற்கு வழி ஏற்படுகிறது. ஆயிரக்கணக்கான மாடுகள் போய்க்கொண்டிருக்கின்றன. அதனால் இந்தப் பக்கங்களில் படு மோசமான மாடுகளுக்குக் கூட நல்ல விலை இருந்து கொண்டிருக்கிறது. இதற்கு அடி மாடு என்று சொல்லுவோம். அதனுடைய தோலுக்கு அவ்வளவு மதிப்பு இருக்கிறது. தடை செய்வதற்கு வழி இல்லாவிட்டாலும் பின்னால் விதி ஏற்படுத்தும்போது இதற்கு ஓர் ஏற்பாடு செய்தால் இப்படி கடத்தல் நடப்பதை நிறுத்த வழி ஏற்படும் என்று நினைக்கிறேன். பெரிய பணக்காரர்கள் சொந்த மாடுகள் வாங்குகிறார்கள். பசுக்களை கரவை முடிந்தவுடன் அதைத் தெருவில் அவிழ்த்து விட்டு விடுகிறார்கள். சென்னையில் இதை நாம் சாதாரணமாகப் பார்க்கலாம். சென்னையில் அநேக இடங்களில் அப்படிப்பட்ட மாடுகளைப் பார்க்கலாம். சுமார் 300 அல்லது 400 மாடுகள் தெருவில் கிடக்கும். தீவனங்களைச் சாப்பிட்டுக்கொண்டு திரிந்துகொண்டு போக்குவரத்தை தடை செய்து கொண்டும் இருப்பதைப் பார்க்கலாம். அவைகள் ஸ்லாட்டருக்கு வரக் கூடிய நிலைமையில்கூட இருக்கின்றன. அதற்கு 8–ஆவது க்ளாசில் நல்ல ஒரு விதி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதாவது "whoever poisons, maims or renders useless any animal with intent to make, or knowing that he is likely to make, such animal fit for slaughter under the provisions of this Act . . ." என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்லாட்டர் செய்யக்கூடிய நிலைமைக்கு மாடுகளை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். என்று தெரிந்தவுடனேயே, ஆரம்பத்திலேயே 5-20 p.m.
அவர்களுக்கு "பெனல்டி" போடக்கூடிய நிலைமை இருந்தால்தான் நல்ல மாடுகள் வளர்ப்பார்கள். "ஸ்லாட்டர்" ஸ்டேஜுக்கு வந்த பிற்பாடு "பெனல்டி" போடுவதில் பிரயோசனம் இல்லை. ஆரம்பத்திலேயே மாடுகளை ரோடுகளில் தற்காப்பு இல்லாமல் அவிழ்த்துவிடுவதை தடுக்க வேண்டும் அதற்கான ஏற்பாடுகளை "ரூல் மேகிங் பவரின்" கீழாவது செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்த மசோதாவை நான் ஆதரிக்கிறேன்.

[3rd April 1958

*SRI M. JAGANNATHAN : கனம் தலைவர் அவர்களே, இந்த கால்நடைப் பாதுகாப்பு மசோதாவை நான் வரவேற்கிறேன். கனம் அமைச்சர் அவர்கள் சென்ற மாதத்திலே சென்னை நகரில் இருக்கிற பூந்த மல்லியிலே ஒரு கேந்திர கால்நடை கிராம திட்ட விழாவிலே கலந்து
5-21 p.m. கொண்டு பேசினார், நம்முடைய மாநிலத்தில் பசுவதையை தடை செய்வதற்காக கூடிய சீக்கிரம் சட்ட சபையில் நான் ஒரு மசோதாவை கொண்டு வரப்போகிறேன். நம்முடைய நாட்டிலே பசுக்களை காப்பாற்றுவது இன்றியமையாதது, பசுவை ஹிந்து மத சம்பிரதாயப்படி தெய்வீகமாக, தெய்வத்திற்கு சமமாக கருதுகிறோம். மகாலக்ஷ்மிக்கு சமமாக நாம் கருதுகிறோம். அது மாத்திரமல்ல. கால்நடை வளர்ச்சியில் தமிழரைப் போல உற்சாகம் உடையவர்கள் யாரும் இருக்க முடியாது. ஆண்டாள் அம்மையார் கூட'' . . . . குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள் . . . என்று கூறியிருக்கிறார்கள். தமிழ் நாட்டில் வருடம் தோறும் பொங்கல் விழாவை ஒட்டி பசுக்களை நாம் வெகுவாக கொண்டாடி வணங்குகிறோம். என்றெல்லாம் அந்த கூட்டத்திலே அமைச்சர் அவர்கள் பேசியதாக நான் பத்திரிகையில் படித்தேன். (சிரிப்பு) ஆகவே, இம்மாதிரிபான ஒரு உயர்ந்த லட்சியத்தை பாதுகாப்பதற்காக இந்தக் கால்நடைய சம்ரக்ஷணை மசோதா வந்திருப்பதைப் பற்றி நான் பாராட்டுகிறேன். அதே சமயத்தில் மற்றொரு விஷயத்தை இந்த அவையிலே கூற விரும்புகிறேன். அதாவது, சில வருஷங்களுக்கு முன்னால் அமெரிக்காவிலிருந்து நமது நாட்டிற்கு ஒரு பெரிய பொருளாதார நிபுணர் வந்தார். நம்முடைய பாரத நாட்டிலே இவ்வளவு தூரம் வறுமை தாண்டவமாடுவதற்கு காரணம் என்னவென்பதை அவர் பரிசீலனை செய்து பார்த்தார். அப்படி பரிசீலனை செய்து பார்த்து கடைசியிலே ஒரு முடிவுக்கு வந்தார். இந்தியாவின் அடிப்படையான வறுமைக்கு சில காரணங்கள் உண்டு என்று அவர் சொல்லியிருக்கிறார். முதல் காரணம் இந்தியாவில் இருக்கிற அதிகமான எண்ணிக்கையுள்ள குரங்குகள். இரண்டாவது, இந்தியாவினுள்ள அதிகமான எண்ணிக்கையுள்ள கால்நடைகள். மூன்றாவது இந்தியாவில் இருக்கிற ஹிந்து மதத்தைச் சேர்ந்த மக்களுடைய "புட் ஹாபிட்ஸ்" உணவு பழக்கவழக்கங்கள். இந்தியாவினுடைய அடிப்படையான வறுமைக்கு காரணம் இந்த மூன்றும் தான் என்று அவர் எடுத்து கூறினார். நம் நாட்டிலே வறுமைக்கு காரணம் அதிகமான கால்நடைகள் இருப்பது என்று அவர் கூறியிருக்கிறார். நம்முடைய நாட்டிலே கால்நடைகளின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது. ஆனால் அந்தக் கால்நடைகளின் தரம் அதாவது "குவாலிடி" மோசமாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. ஆஸ்திரேலியா நாட்டிலே எவ்வளவு ஆடுமாடுகள், கால்நடைகள் இருக்கின்றனவோ அதைவிட அதிகமாக நம்முடைய நாட்டில் இருக்கின்றன. பசுவதையை தடுப்பதற்கு இந்த மசோதாவை கொண்டு வருகிறோம் என்று சொல்லிவிட்டு, இதோடுகூட ஆண் எருமை, பெண் எருமை, எருமைக் கிடா இவைகளையெல்லாம் சேர்த்து ஒன்றாக இந்த மசோதாவில் கொண்டு வருவது, மேலும் மேலும் கால்நடைகளை அதிகமாக வளர்த்து நம்முடைய நாட்டில் இருக்கும் வறுமையை அதிகப்படுத்துவதற்கு ஒரு காரணமாக இருக்கும் என்பதை நான் இந்த சந்தர்ப்பத்திலே சுட்டிக்காட்ட விரும்புகிறேன். கோ சம்வர்த்தன கமிட்டியார் செய்துள்ள சிபாரிசின் பேரில் மத்திய சர்க்கார் இந்த சர்க்காருக்கு ஒரு நகல் மசோதாவை அனுப்பியதாகவும் அதைப் பார்த்து இவர்கள் இந்த மசோதாவை தயாரித்திருப்பதாகவும், மைசூர் ராஜ்யத்தைவிட ஒரு படி அதிகமாகவே இவர்கள் போய் இந்த மசோதாவை தயாரித்திருக்கிறார்கள் என்றும் நான் அறிகிறேன். பசுவதையை மாத்திரம் தடை செய்வதற்கு நாம் இந்த மசோதாவில் வரையறுத்துவிட்டு, எருமைக் கிடாக்களையும் அதனுடைய கன்றுகளையும் இந்த மசோதாவின் குறிக்கோளிலிருந்து நீக்கிவிடுவதற்கு வழி வகை செய்தால் தான், அது பல விதத்திலும் நன்மை பயக்கும் என்று நான் நினைக்கிறேன். நம்முடைய நாட்டில் சில சமூகத்தைச் சேர்ந்தவர்கள்—நான் பெயரைச் சொல்வதற்கு விரும்பவில்லை—இந்தப் பிராணிகளை உணவாக உட்கொள்ளுகிறார்கள். அந்த ஏழை மக்களுக்கு அதிக விலை கொடுத்து மாமிசம்

3rd April 1958] [Sri M. Jagannathan]

வாங்கி சாப்பிடுவதற்கு அவர்களுடைய பொருளாதார நிலைமை இடம் கொடுக்கவில்லை. ஆகவே, இந்த மாமிச உணவை அவர்கள் குறைந்த விலையில் வாங்கி உட்கொள்ள எதுவாக இருக்கிறது. இந்த மசோதா நிறைவேற்றப்பட்டுவிட்டால் அதை நாம் முழுதும் தடை செய்தவர்களாவோம். அது மாத்திரமல்ல. இந்த மசோதா சட்டமாக நிறைவேற்றப்பட்டால் நம்முடைய நாட்டிலே இப்பொழுது கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து கொண்டிருக்கிற தோல் பதனிடும் தொழில் மிகவும் பாதிக்கப்படும் என்று நான் நினைக்கிறேன். 'ஹைட்ஸ் அண்டு ஸ்கின்ஸ்' பெரும்பாலும் கால்நடைகளிலிருந்து நாம் பெருகிறோம். நம்முடைய நாட்டின் தேவைக்கு போதிய அளவிலே நம்மால் தோல் உற்பத்தி செய்ய முடியவில்லை. தேவை எராளமாக இருக்கிறது. அதற்குத் தகுந்த அளவிற்கு தோல் பதனிடும் தொழிலை நாம் அபிவிருத்தி செய்து, மக்களுக்கு வேண்டிய பொருள்களை தோலினால் செய்துகொள்ள வழி வகைகள்தேட வேண்டும். இந்த நிலைமையில் இம்மாதிரியான ஒரு மசோதாவை கொண்டு வந்து கால்நடை எல்லாவற்றையுமே வதை செய்வதை தடை செய்துவிட்டால், அதனால் பலவித இன்னல்கள் ஏற்படும் என்பதை நான் வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். என்னுடைய திருத்தத்தில் நான் கொடுத்திருக்கிறபடி, பசவை மாத்திரம், கரவை மாட்டையும் அதனுடைய கன்றையும் மாத்திரம் இந்த மசோதாவின்கீழ் வைத்துக் கொண்டு, இந்த மசோதாவில் சேர்க்கப்பட்டிருக்கிற இதர பிராணிகளை, எருமை கிடா அதனுடைய கன்று இவைகளையெல்லாம் விலக்கிவிட்டால், இந்த மசோத உண்மையிலேயே மக்களுக்கு நன்மை பயக்கக்கூடியதாக இருக்கும். இதனால் நம் நாட்டின் வறுமைக்கு அடிப்படைக் காரணமான கால்நடைகளின் எண்ணிக்கை ஓரளவுக்கு குறைக்கப்பட்டு, தரத்தில் உயர்ந்த கால்நடைகளை நல்ல முறையிலே கேந்திர கிராம திட்டங்கள் மூலமாக நாம் அபிவிருத்தி செய்து, மக்களுக்கு நல்ல சுபிட்சமான வாழ்வை தேடிக் கொடுக்க முடியும் என்று கூறிக்கொண்டு, இந்த மசோதாவை நான் வரவேற்கிறேன்.

MR. SPEAKER : As many more hon. Members want to participate in the debate I think there is no point in my sitting some more time to finish this off. I therefore adjourn the discussion on this subject to 3 o'clock on Saturday the 5th April 1958. The idea was that we should meet at half past three for discussion of this subject. But in view of the fact that more members are participating if the house has no objection I shall adjourn discussion on this subject to 3 o'clock on Saturday the 5th April 1958. The revised programme will be sent to all hon. Members. (Most of the members agreed.) I now adjourn the House to meet at 8-30 a.m. on Saturday the 5th April 1958. 5·30 p.m.

The House then adjourned.